POST WITHOUT PRE-PAYMENT LICENCE NO. G 6-TN-MS C. P. P. 55

ANNA Leading Progressive Tamil Daily of the People

# புரட்சித்தலைவர் முயற்சிக்கு உடனடி வெற்றி

Regd. No. TN-MS (C) 422 Phone : 420212 4 பக்கம் விலை 60 காசு

# அண்ணா

நிறுவனர்: எம்.ஜி.ஆர்

மலர் 10 சென்னை 4-12-1985 புதன் வெளியீடு 5-12-1985 வியாழன் இதழ் 47

## இந்தி ஆணை ரத்து பற்றி டெல்லித் தகவல்

புதுடெல்லி, டிச. 4- மத்திய உதவி பெறும் நிறுவன ஊழியர்கள் கட்டாயமாக இந்திகற்கவேண்டும் என்ற ஆணை வாபஸ் பெறப்பட்டதற்கு முதல்வர் புரட்சித்தலைவரின் முயற்சியே காரணம் என்று தகவல் கிடைத்துள்ளது.

மத்திய அரசிடமிருந்து 50 சதவீத மானியம் பெறும் நிறுவனங்களின் பணிகள் இந்தியிலேயே நடைபெற வேண்டும் என்று ஒரு உத்தரவு பிறப்பிக்கப்பட்டிருந்தது.

இந்த ஆணையைக் கண்டித்து நாடாளுமன்றத்திலும், வெளியேயும் கழகம் குரல் எழுப்பியது.

இந்தித் திணிப்பைத் தமிழகம் ஏற்காது என்று கழகம் உறுதியுடன் அறிவித்தது.

பின்னர் இந்தியைக் கட்டாயமாக்கும் அந்த ஆணையை மத்திய அரசு வாபஸ் பெற்றுக் கொண்டது.

### காரணம் என்ன?

முதல்வர் புரட்சித் தலைவர் அந்தக் கட்டாய இந்தி ஆணை ரத்து ஆவதற்குப் பெரும் முயற்சி எடுத்துக் கொண்டார். டெல்லியில் உயர் மட்டத்தில் அந்தப் பிரச்சினையை எடுத்துச் சென்றார். இந்தித் திணிப்பைத் தமிழகம் ஏற்காது என்பதை டெல்லி மேலிடத்துக்கு புரட்சித்தலைவர் உணர்த்தினார் என்று டெல்லியில் இருந்து வந்த தகவல் கூறுகிறது.

இதைத் தொடர்ந்தே கட்டாய இந்தி ஆணை வாபஸ் பெறப்பட்டதாகவும், அந்தத் தகவல் கூறுகிறது.

அந்த ஆணை தமிழ்நாட்டுக்குச் சம்பந்தம் இல்லாதது. ஏனெனில் தமிழ்நாட்டில் இந்தியை ஏற்கமாட்டார்கள் என்பதை தமிழக அரசு ஏற்கனவே தெரிவித்துள்ளது. எனவே அதற்கும் தமிழகத்துக்கும் சம்பந்தம் இல்லை என்று மத்திய உள்துறை இலாகா அதிகாரிகள் தெரிவித்துள்ளதாகத்தகவல் வெளியாகி உள்ளது.

## மில் பிரச்சினை: பிரதமரிடம் அண்ணாநம்பி முறையீடு

புதுடெல்லி, டிச 4— கோவை பஞ்சாலை ஊழியர் போனஸ் சம்பந்தமாக தமிழகஅரசு பேச்சு நடத்தி உடன்பாடு ஏற்படுத்தியது. ஒருமாத சம்பளமும் 300 ரூபாயும் ஊழியர்களுக்கு கொடுக்க உடன்பாடு ஏற்பட்டு தொழிலாளர்கள் வேலைக்கு சென்றுள்ளனர்.

ஆனால் தேசிய ஜவுளி கார்ப்பரேஷன் மில்களில் 300 ரூபாய் கொடுக்காததால் பிரச்சினை உள்ளது.

இது பற்றி இன்று டெல்லியில் பிரதமர் ராஜீவை கழக எம்.பி. அண்ணா நம்பி சந்தித்தார். அந்த ஊழியர்களுக்கும் முழு தொகையும் வழங்குமாறு பிரதமரை அண்ணா நம்பி கேட்டுக் கொண்டார். மத்திய அமைச்சர் குர்ஷித் ஆலம்கானிடமும் இது சம்பந்தமான கோரிக்கை மனுவை அண்ணா நம்பி கொடுத்தார்.

## ஆர்.வி.பிறந்த நாள்: முதல்வர் சார்பில் வாழ்த்து

புதுடெல்லி, டிச. 4— குடியரசு துணைத் தலைவர் ஆர். வெங்கடராமனுக்கு இன்று 76 வது பிறந்ததினமாகும். மத்திய அமைச்சர்கள் நாடாளுமன்ற உறுப்பினர்கள், உயர் அதிகாரிகள் ஆகியோர் ஆர்.விக்கு பிறந்த நாள் வாழ்த்துக் கூறினர்.

முதல்வர் புரட்சித் தலைவர் சார்பில் நாடாளுமன்ற கழக அணித்தலைவர் ஆர். மோகனரங்கம் ஆர்.விக்கு பிறந்த நாள் வாழ்த்துக்களைத் தெரிவித்தார்.

கழக எம்.பி. ஜெகத்ரட்சகனும் ஆர்.வி.யைசந்தித்து வாழ்த்து தெரிவித்தார்.



இந்தியாவில் உள்ள அமெரிக்கத் தூதர் ஜான்குந்தர் டீன் முதல்வர் புரட்சித்தலைவரைச் சந்தித்துப் பேசினார்.

# சென்னையில் தி.மு.க. கொலைவெறிதாண்டவம்

சென்னை, டிச, 4— சென்னையில் இன்று நடந்த வன்முறைச் சம்பவத்தில் குடிசை மாற்று வாரியத்தலைவர் என்.வி.என். செல்வத்தை கொல்ல முயற்சி நடந்தது. போலீஸ்ஜீப் மற்றும் வேன் பஸ்கள் கொளுத்தப்பட்டன. வன்முறை கும்பலைக்கலைக்க போலீசார் துப்பாக்கிச் சூடு நடத்தினர்.

சென்னையில் இன்று நடந்த வன்முறைச் சம்பவம் குறித்து உள்துறை செயலாளர் வெங்கடராமன் நிருபர்களிடம் கூறியதாவது:—

இன்று காலை நடந்துள்ள சம்பவம், மீனவர்களின் கட்டுமரப்பிரச்சினை பற்றியது அல்ல.

குடிசை மாற்று வாரிய வாடகை வசூல் செய்வதை நிறுத்தி வைக்கும்படி கோரிக்கை கொடுக்ககூட்டமாக சென்றுள்ளனர்.

அப்போது பேச்சுவார்த்தையில் கடுமை ஏற்பட்டுள்ளது.

குடிசைமாற்று வாரியத் தலைவர் என். வி, என். செல்வத்தை தாக்க முற்படும் நிலை ஏற்பட்டது.

ஆனால் போலீசார் அவரை மிகவும் சிரமப்பட்டு பாதுகாத்து அழைத்து சென்றனர்.

பிறகு அந்தக் கும்பல் வன்முறையில் ஈடுபட்டது.

### போக்குவரத்து பாதிப்பு

குடிசை மாற்று வாரிய அலுவலகத்தைத் தாக்கினர்.

கண்ணாடிகளை உடைத்தனர். போக்குவரத்தை தடுத்து நிறுத்த ரோடு மறியலில் ஈடுபட்டனர்.

வீடுகளில் இருந்து கட்டு மரங்களை எடுத்து வந்து சாலைகளின் குறுக்கே போட்டு மறித்தனர்.

அவைகளை போலீசார் அப்புறப்படுத்த முயன்றனர். போலீசார்மீதும் தாக்குதல் நடந்தது

வானொலி நிலையம் எதிரேயுள்ள போலீஸ் நிலையத்தையும் தாக்கினர்,

### ஜீப்புக்கு தீ வைப்பு

போலீஸ் ஜீப் ஒன்றை தீ வைத்துக் கொளுத்தினர்.

ஆயுதப் போலீசார் ஏறி வந்த இரண்டு லாரிக்கும் தீ வைக்க முற்பட்டனர்.

5,6 பஸ்கள் மீதும் தாக்குதல் நடந்தது கண்ணாடிகள் உடைந்தன.

ஒரு பஸ்சை தீவைத்துக் கொளுத்தினர்.

போலீஸ் கமிஷனர் அங்கிருந்து நிலைமையைக் கட்டுக்குள் கொண்டு வர முயற்சிகள் எடுத்தார்.

வன்முறைக் கும்பலைக் கலைக்க போலீசார் முதலில் தடியடிப் பிரயோகமும் பிறகு கண்ணீர் புகையையும் பிரயோகித்தனர்

இரு இடங்களில் துப்பாக்கிச் சூடும் நடந்தது

### போலீசாருக்கு காயம்

வன்முறையாளர்கள் நடத்திய தாக்குதலில் ஒரு இன்ஸ்பெக்டரும் சப் இன்ஸ்பெக்டர்கள் 9 பேரும் காயமடைந்துள்ளனர்.

துப்பாக்கிச்சூட்டில்காயம் அடைந்தவர்கள் பற்றியவிவரம் இன்னும் வந்து சேரவில்லை. இப்போது நிலைமை கட்டுக்குள் கொண்டுவரப்பட்டுள்ளது

இவ்வாறு வெங்கட்ராமன் கூறினார்

### செல்வத்தை கொல்ல முயற்சி

குடிசை மாற்று வாரிய அலுவலகத்தை வன்முறைக் கும்பல் ஒன்று தாக்கியது. வாரியத்தலைவர் என். வி. என். செல்வமும் தாக்கப்பட்டார்,

பயங்கர ஆயுதங்களுடன் இக்கும்பல் தாக்குதலில் ஈடுபட்டதில் இருந்து தி.மு.க. வினரின் பின்னணி இச்சம்பவத்திற்குக் காரணமாக இருக்கும் எனக் கூறப்படுகிறது.

போலீஸ் இன்ஸ்பெக்டர் கோதண்டராமனுக்கு அரிவாள் வெட்டு விழுந்துள்ளது ஏராளமான போலீசார் கல்வீச்சில் காயமடைந்துள்ளனர்.

### டெல்லியில் விஷவாயு

புதுடெல்லி. டிச. 4— மேற்கு டெல்லிப் பகுதியில் ரசாயனத் தொழிற்சாலை ஒன்றில்ஏற்பட்ட விஷவாயு கசிவால் அப்பகுதியில் பதட்டம் ஏற்பட்டது. தகவல் கிடைத்தவுடன் உடனடியாக தீயணைப்புப் படையினர் மற்றும் போலீசார் விரைந்து சென்றுள்ளனர்.

இச்சம்பவம் பற்றி மேற்கொண்டு விவரம் கிடைக்கவில்லை.

### இந்திய எல்லையில் கடத்தல்

புதுடெல்லி. டிச. 4— இந்திய எல்லைப்பகுதியான கட்ச் பிராந்தியத்தில் கடத்தல் நடைபெற்றதாக அரசுக்கு தெரிய வந்துள்ளதென்று மக்கள் சபையில் அமைச்சர் அருண்நேரு கூறினார்

அரசு ரகசியங்கள், ஏதும் வெளி நாட்டிற்கு தெரிவிக்கப்பட்டதாக தகவல் இல்லை என்றும் அருண் நேரு கூறினார்

## கொடி நாள்: முதல்வர் புரட்சித்தலைவர் வாழ்த்துச் செய்தி

நாளை (5ந்தேதி) கொடி நாள் கொண்டாடப்படுவதையொட்டி முதல்வர் புரட்சித் தலைவர் விடுத்துள்ள வாழ்த்துச் செய்தி:

நமது நாட்டின் தரை கடல் வான் ஆகிய மூன்று எல்லைகளையும் காத்து நிற்பதில் நமது முப்படை வீரர்கள் ஆற்றும் கண்துஞ்சாக் கடமைகளுக்கு நாட்டு மக்கள் நன்றி தெரிவிக்கும் ஒரு நல்ல வாய்ப்பாக ஆண்டு தோறும் டிசம்பர் திங்களில் கொண்டாடப்படும் கொடிநாள் அமைந்திருக்கிறது. போர்க்காலங்களில் மட்டுமின்றி, வெள்ளம், இயற்கை சீற்றங்கள் போன்றவை ஏற்படுகின்ற நேரங்களிலும் முப்படை வீரர்கள் மக்களுக்குத் தொண்டாற்றுகிறார்கள். நாட்டைக் காக்கும் பணியில் தங்களையே காணிக்கையாக்கிவிட்ட வீரர்களின் குடும்பங்களையும் போர் நடவடிக்கைகளால் செயல் இழந்து விட்ட வீரர்களையும் அவர்களை நம்பியிருப்பவர்களையும் காப்பாற்ற வேண்டியது நமது சமூகப் பொறுப்பாகும்.

இந்தப் பொறுப்பை நிறைவேற்றிட கொடி நாள் அன்று மக்கள் மனமுவந்து வழங்கும் நன்கொடைகள் பெரிதும் உதவி செய்வதாக இருக்கும்.

நமது படைவீரர்களின் தியாகத்தையும் வீரத்தையும் கடமை உணர்வையும் பாராட்டி நன்றி தெரிவிக்கும் அடையாளமாக கொடி நாள் அன்று படை வீரர் சேமநல நிதிக்கு உற்சாகத்தோடு நன்கொடை வழங்கிட வேண்டும் என்று மக்கள் அனைவரையும் அன்புடன் கேட்டுக் கொள்கிறேன்

இவ்வாறு முதல்வர் புரட்சித்தலைவர் தமது வாழ்த்துச் செய்தியில் குறிப்பிட்டுள்ளார்

# கழகவேட்பாளரை மாபெரும் வெற்றி பெறச்செய்திடுவீர்

### பழனியாண்டி வேண்டுகோள்

செய்யாறு, டிச 4. கழக வேட்பாளர் குப்புசாமியை பல ஆயிரம் வாக்கு வித்தியாசத்தில் மாபெரும் வெற்றி பெற செய்யுங்கள் என்று தமிழ்நாடு காங்கிரஸ் தலைவர் பழனியாண்டி வேண்டுகோள் விடுத்தார்.

செய்யாறு கழக வேட்பாளர் குப்புசாமியை ஆதரித்து காங்கிரஸ் சார்பில்நடைபெற்ற கூட்டத்தில்பங்கேற்று தமிழ்நாடு இந்திராகாங்கிரஸ் தலைவர் பழனியாண்டி பேசுகையில் கூறியதாவது:-

அனைத்திந்திய அண்ணா தி.மு. கழக வேட்பாளர் குப்புசாமியைப் பற்றி நான் கேள்விப்பட்டிருக்கிறேன். அவர் சாதாரணமானவர், சாமானியர் அவரை வெற்றி பெறச் செய்யுமாறு உங்களைக் கேட்டுக்கொள்கிறேன்.

மத்திய அரசுக்கும், தமிழக அரசுக்கும் உள்ள சுமுகஉறவுதான் இந்தக் கூட்டு என்றால் மிகையாகாது. அரசியல் சட்ட நீதிக்கு முரணாக மாநில அரசுகள் இருக்கக் கூடாது என முதல்வர் புரட்சித்தலைவர் செயல்பட்டு வருகிறார்

### மக்கள் சேவையே முக்கியம்

முதல்வர் புரட்சித் தலைவரும், பிரதமர் ராஜீவும் இணைந்து மக்களுக்கு வேண்டிய வற்றைச் செய்து வருகின்றனர்.

அனைத்திந்திய அண்ணா திமு கழகமும் காங்கிரசும் கூட்டு சேர்ந்திருப்பது பதவியை பிடிக்க வேண்டுமென்பதற்கோ, பதவியில் இருக்கவேண்டும் என்பதற்கோ அல்ல மக்களுக்கு சேவைசெய்யவே இந்தக் கூட்டு அமைக்கப்பட்டது.

இலங்கைத் தமிழர் பிரச்னையில்சுமுகமுடிவு ஏற்பட பிரதமர் ராஜீவ் காந்தியும், முதல்வர் புரட்சித்தலைவரும் இணைந்து செயல்படுகின்றனர்.

மாநிலத்திற்கு அதிக நிதியை மத்திய அரசிடம் கேட்டு தமிழகத்திற்கு முதல்வர் புரட்சித் தலைவர் நிறைய சேவைகளைச் செய்து வருகிறார்.

### கூடுதல் நிதி பெற்றார்

7வது ஐந்தாண்டு திட்டத்திற்கு 4 ஆயிரம் கோடி ரூபாய் தமிழகத்திற்கு ஒதுக்கப்பட்டது. ஆனால் முதல்வர் புரட்சித்தலைவர் பிரதமர் ராஜீவ்காந்தியிடம் பேசி தமிழகத்திற்கு 7 ஆயிரம் கோடி ரூபாய் பெற்று வந்துள்ளார் முதல்வர் புரட்சித்தலைவர் டெல்லியில் அதிக நிதி கோரி பிரதமரை சந்திக்க வந்திருந்தபோது நானும் நாடாளுமன்ற உறுப்பினர் பலராமனும் டெல்லியில் இருந்தே பிரதமரை சந்தித்து தமிழகத்திற்கு அதிக நிதி தாருங்கள் என்று கோரினோம்.

தமிழகத்திற்கு வேண்டிய நிதியைப் பெற்றுத் தருவதில் மாநில அரசுக்கு நாங்கள் என்றும் உறுதுணையாக இருப்போம்.

விவசாயிகளும் தொழிலாளர்களும் கோரிக்கைகளுக்காக அரசை அணுகும்போது போராட்டம் நடத்தக்கூடாது பேச்சு வார்த்தை மூலம் தீர்வு காண்பதே நல்லது. முதல்வர் புரட்சித் தலைவர் தலைமையிலான தமிழக அரசு கோடிக் கணக்கான ரூபாய்களை தொழிலாளர்களுக்கும் விவசாயிகளுக்கும் திட்டமிட்டு செலவழிக்கிறது.

இந்தத் தொகுதியில் அனைத்திந்திய அண்ணா தி. மு. கழக வேட்பாளராக போட்டியிடும் குப்புசாமி சாதாரணமானவர் சாமானியர் அவரை பல ஆயிரம் வாக்கு வித்தியாசத்தில் வெற்றிபெறச் செய்வது உங்கள் கடமை.

இவ்வாறு பழனியாண்டி பேசினார்.

# மதுரையில் விமான படைதளம்: புரட்சித்தலைவர் முயற்சி வெற்றி

சென்னை, டிச 4— தென்மாநில விமானப் படைத்தளம் முதல்வர் புரட்சித்தலைவர் முயற்சியால் மதுரையில் அமையவிருப்பதாக தகவல் கிடைத்துள்ளது

தென்மாநில விமானப்படைத்தளம் கேரளாவில் திருவனந்தபுரம் அருகே அமைக்கப்படுவதாக இருந்தது ஆனால் அந்த இடத்தில் ஏராளமான தென்னை மரங்கள் உள்ளன அந்த இடத்திற்கு கேரள அரசு கூறும் விலையும் அதிகம்.

எனவே விமானப்படைத் தளம் அமைப்பதற்கான பட்ஜெட்டில் அந்த அளவுக்கு நிலம் ஆர்ஜிதத்துக்காக செலவிட முடியாது என்று விமானப்படைத் துறை கருதுகிறது

எனவே மாற்று இடமாக மதுரையில் விமானப்படை தளம் அமைக்கலாம் என்ற கருத்து உள்ளது இதற்காக விமானப்படைத் தளபதி டி. ஜே டிசா சென்னை வந்து முதல்வர் புரட்சித் தலைவரை சந்தித்தார்.

அப்போது முதல்வர் விமானப்படை தளத்துக்கான இடத்தை தமிழக அரசு தரத் தயாராக இருப்பதாகத் தெரிவித்துள்ளார்.

இதைத் தொடர்ந்து, மதுரையில் உள்ள இடம் பார்க்கப்பட்டுள்ளது விமானப்படைத் தளத்திற்கு வேண்டிய நிலத்துக்கு மேல் கூடுதலாக அங்கு நிலம் உள்ளது மிகக் குறைந்த விலையில் அந்தஇடத்தைக்கொடுக்க தமிழக அரசு முன் வந்துள்ளது அந்த இடம் தென் மாநில விமானத்தளம் அமைப்பதற்கு ஏற்றதாக இருப்பதாக விமானப்படையும் கருத்து தெரிவித்துள்ளது இதைத் தொடர்ந்து மதுரையில் விமானப்படைத்தளம் அமைக்கப்பட இருக்கிறது என்று தகவல் கிடைத்துள்ளது.

### தேவையா?

இரண்டு பேர் வாழ இலட்சக்கணக்கில் ரூபாய் போட்டு வீடு கட்டுவது தேவையில்லாததாகும்.

—பேரறிஞர் அண்ணா

### வதந்தி

அடக்கமற்ற மனிதன் வெளியிடும் பொய் வதந்திகளால் அவன் தனக்கு மட்டுமல்ல தன் சமுதாயத்திற்கும் பெருங்கேட்டை விளைவிக்கின்றான்.

—தந்தை பெரியார்

# விஷபுகை வீசும் திமுக. மிரட்டலுக்கு அஞ்சோம்

## அமைச்சர் முத்துசாமி முழக்கம்

செய்யாறு, டிச, 4— விஷப்புகை வீசி தி.மு.க. வினர் எங்களை சொல்ல முயன்றாலும் பொது மக்களுக்கு சேவை செய்வதிலிருந்து பின்வாங்க மாட்டோம் என்று அமைச்சர் முத்துசாமி உணர்ச்சி ததும்ப முழக்கமிட்டார்.

கழக வேட்பாளர் குப்புசாமியை ஆதரித்து செய்யாறுமண்டிநிலையில் நேற்று இரவு இந்திராகாங்கிரஸ் கட்சி சார்பில் தேர்தல் பிரச்சாரக்கூட்டம் நடைபெற்றது.

இந்தக் கூட்டத்திற்கு மாவட்ட காங்கிரஸ் தலைவர் சவுந்தரராசன் தலைமை வகித்தார், கூட்டத்தில் அமைச்சர் முத்துசாமி, தமிழ்நாடு இந்திரா காங்கிரஸ் தலைவர் பழனியாண்டி, நாடாளுமன்ற உறுப்பினர்கள் பலராமன், ஜீவரத்தினம், ஏ.சி. சண்முகம் சட்டமன்ற உறுப்பினர்களும் மற்றும் கன்னியப்ப முதலியார், தேவராஜ், எம். பூபாலன் செங்குட்டுவன், பி.ஏ. சண்முகம், எஸ்.கே. பாபு உள்ளிட்ட பலரும் பேசினர்.

கூட்டத் துவக்கத்தில் ராவணன் குழுவினரின் கலை நிகழ்ச்சி நடைபெற்றது. கூட்ட முடிவுக்கு பின் நள்ளிரவு (1மணி வரை நவரசம் ஜி.கே.எஸ், குழுவினரின் கலை நிகழ்ச்சி நடைபெற்றது)

கூட்டத்தில் அமைச்சர் முத்துசாமி பேசுகையில் கூறியதாவது:

அன்றைக்கு (விஷவாயு சம்பவம் நடந்த அன்று) இதே இடத்தில் இதே மேடையில் கழக வேட்பாளர் குப்புசாமி அறிமுகக் கூட்டம் நடைபெற்றது.

அந்த மேடையில் 125 வாட்ச பல்பு தான் போடப்பட்டிருந்தது. அன்று பல்பு எதுவும் உடையவில்லை.

ஆனால் பல்புதான் உடைந்தது என்று திமுகவினர் பிரச்சாரத்தில் ஈடுபடுகின்றனர் இந்த மேடையில் கழகத்தின் முக்கிய பிரமுகர்களும், நாடாளுமன்ற உறுப்பினர்களும், சட்டமன்ற உறுப்பினர்களும் இருந்தனர்.

இவர்களை தேர்தல் பணி செய்யவிடாது செய்து விட்டால் தேர்தலில் கழகம் வெற்றி பெறமுடியாது என நினைத்து செயல் பட்டிருக்கிறார்கள்.

அன்று நடந்த சம்பவத்தில் பாதிக்கப்பட்டவர்கள் ஏழுபேரை எழும்பூர் கண் மருத்துவமனையில் சேர்த்து விட்டுத்தான் இங்கு வந்திருக்கிறேன்.

### சீப்பை ஒளித்துவிட்டால்...

அன்று நடந்த சம்பவத்திற்கு மறுதினமே சென்னையிலுள்ள தி.மு.க. தலைமை நிலையத்திலிருந்து செய்யாற்றில் இதுபோன்ற சம்பவம் நடைபெறவில்லை என அறிவிப்பு வந்தது எங்கள்கட்சி (தி.மு.க.) தோழர்களுடன் தொடர்பு கொண்டு இதைத் தெரிவிக்கிறோம் எனக் கூறினார்கள்.

எங்கள் கட்சி (கழகம்) பிரமுகர்களை தேர்தலில் பணியாற்ற விடாது செய்து விட்டால் நாங்கள் வெற்றி பெற முடியாது என திமுகவினர் நினைத்துள்ளார்கள். சீப்பை ஒளித்து விட்டால் கல்யாணம் நின்று போய் விடும்? இந்த மிரட்டல்களுக்கு அஞ்ச மாட்டோம்.

இங்கு முன்பு சட்டமன்ற உறுப்பினராக இருந்த முருகன் பட்டுக்கோட்டை அழகிரி டெப்போ ஒன்று செய்யாற்றில் அமைக்க வேண்டுமென்றார். அவர் என்னிடம் வைத்த முதல் கோரிக்கையே அதுதான். தேர்தல் நேரமாக இருப்பதால் அதைப் பற்றி எதுவும் சொல்லக் கூடாது செய்யவேண்டிய நேரத்தில் செய்வோம்.

செய்யாற்றிற்கு பஸ் டெப்போ வேண்டுமென்று முருகன் கேட்ட போது ஒரு டெப்போ அமைக்க 25 லட்ச ரூபாய் செலவாகிறது. நீங்கள் இடம் பார்த்து வந்தால் பரிசீலித்து நடவடிக்கை எடுக்கிறேன் என்றேன். உடனடியாக இடத்தை பார்த்து அதற்கான வரைபடத்தையும் என்னிடம் தந்தார் அவர் நினைவாக நாங்கள் இங்கு நல்ல காரியங்கள் செய்வோம்.

இவ்வாறு அமைச்சர் முத்துசாமி பேசினார்.

# குமரி, ராமேஸ்வரம் வளர்ச்சிக்கு 43 கோடி ரூபாயில் திட்டம்

புதுடெல்லி, டிச. 4— கன்னியாகுமரி வளர்ச்சிக்கு 15 கோடி ரூபாயிலும், ராமேஸ்வரம் வளர்ச்சிக்கு 28 கோடி ரூபாயிலும் திட்டம் தீட்டப்பட்டிருப்பதாக மாநிலங்களவையில் கழக அணித்தலைவர் மோகனரங்கம் கேள்விக்கு பதிலளித்து மத்திய அமைச்சர் கூறினார்.

கன்னியாகுமரி, மகாபலிபுரம், ராமேஸ்வரம் ஆகிய சுற்றுலாத்துறைகளின் வளர்ச்சிக்கு மத்திய அரசு எடுத்துள்ள நடவடிக்கைகள் என்னென்ன என்று நாடாளுமன்றத்தில் கழக அணித்தலைவர் மோகனரங்கம் கேட்டார்.

### பெரும் திட்டம்

அதற்குப் பதிலளித்து மத்திய அமைச்சர் கூறியதாவது:-

கன்னியாகுமரி, மகாபலிபுரம், ராமேஸ்வரம் ஆகிய இடங்களின் வளர்ச்சிக்கு பெருந்திட்டம் தீட்டப்பட்டுள்ளது!

மகாபலிபுரத்தின் பத்தாண்டு திட்டத்துக்கு 6 கோடிரூபாயும்ராமேஸ்வரம் வளர்ச்சிக்கான பத்தாண்டு திட்டத்துக்கு 28 கோடி ரூபாயும், கன்னியாகுமரி வளர்ச்சிக்கு 15 கோடி ரூபாய் திட்டமும் தீட்டப்பட்டுள்ளது.

இவ்வாறு அமைச்சர் கூறினார்.

இலங்கைத் தமிழர் நிவாரண நிதிக்கு பாடநூல் நிறுவனத் தலைவர் கோடம்பாக்கம் குமார் ஒரு லட்சத்திற்கான காசோலையை முதல்வர் புரட்சித் தலைவரிடம் வழங்கினார். அப்போது அமைச்சர் அரங்கநாயகம் உடனிருந்தார்.

# தமிழக கடல் எல்லை காக்கும் ஔவையார்-ரமாதேவி - சின்னம்மா

சென்னை, டிச 4— வங்கக்கடல் எல்லைப் பகுதியை காவல்காக்கும் கப்பல்கள் பெயர் ரமாதேவி, ஔவையார், கிட்டூர் சின்னம்மா, கடல் எல்லைக் காவல் படைக்கு வாங்கப்பட்ட புதிய போர்க் கப்பல் ஔவையார் கல்கத்தாவில் கட்டப்பட்டது இது

வங்கக்கடல் எல்லையைக் காக்கும் கடற்படைக்கு 'ஔவையார்' கப்பல் அனுப்பப்பட்டுள்ளது. அந்த கப்பல் சென்னைத் துறைமுகம் வந்து சேர்ந்தது.

இந்தகப்பல் தமிழககடல் எல்லைப் பகுதியைக் காவல் காத்து வரும்.

தமிழககடல் எல்லையைக் காக்கும் பணியில் ராணி ஜின்டான், கிட்டூர் சின்னம்மா, ரமாதேவி, ஆகிய கப்பல்கள் ஏற்கெனவே ஈடுபட்டுள்ளன அவற்றுடன் ஔவையார் கப்பலும் சேர்ந்து கொள்ளும்.

இலங்கை ராணுவம்கடல் பகுதியில் அட்டூழியம் செய்வதால். இந்திய மீனவர்களுக்குப் பாதுகாப்பு கொடுப்பதற்காகவும் சிங்கள ராணுவத்துக்குப் பதிலடி கொடுப்பதற்காகவும் இந்தகப்பல்கள் தமிழக கடல் எல்லையில் ரோந்து சுற்று வருகின்றன.

### நக்சல்களுக்கு ஆயுத சப்ளை: 2 போலீசார் கைது

ஐதராபாத், டிச 4— நக்சல் பாரிகளுடன் தொடர்பு வைத்திருந்ததாகவும் அவர்களுக்கு துப்பாக்கி, வெடி மருந்து ஆகியவை ரகசியமாக சப்ளை செய்ததாகவும் ஐதராபாத்தைச் சேர்ந்த 2 போலீசார் உட்பட 4 பேர் கைது செய்யப்பட்டனர்.

### நாட்குறிப்பு

#### 46-வது வட்டம் துறைமுகம் பகுதி

நாள்: 5-12-85 மாலை 7 மணி

இடம்: ரங்க பிள்ளை தோட்டத் தெரு

தலைமை: கே குமார்

முன்னிலை: எம்.பி ஆனந்தன்

பேசுவோர்:— திருவை அண்ணாமலை, எம். வி. ராமன். மண்ணடி கிருஷ்ணமூர்த்தி, கஜேந்திர பாபு மற்றும் பலர்

### குடும்ப கார்டுகளுக்கு கூடுதல் சர்க்கரை

சென்னை, டிச, 4— ரேஷன் கடைகளில்டிசம்பர் மாதத்தில் குடும்பக்கார்டுகளுக்கு கூடுதலாக ஒரு கிலோ சர்க்கரை அளிக்க அரசு உத்தரவிட்டுள்ளது.

### ராஜீவ் காந்திக்கு சமாதான பரிசு

மெக்சிகோ, டிச. 4— அமெரிக்காவில் கலிபோர்னியா நகரில் உள்ள ஒரு நிறுவனம் பிரதமர் ராஜீவ் காந்திக்கு சமாதான பரிசு வழங்குகிறது. இந்த விருது வழங்கு விழா வரும் 14-ந் தேதி நடைபெறுகிறது. சமாதான பரிசு பெறுகிறவர்களுக்கு தலா 10 ஆயிரம் அமெரிக்க டாலர் பணமும், (ரூபாய் 1 லட்சத்து 20 ஆயிரம்( கேடயமும் கிடைக்கும்.

### சைக்கிள் பயணம் மூலம் கழகப் பிரச்சாரம்

சென்னை, டிச. 4— உடுமலைப்பேட்டையைச் சேர்ந்த உமர்அலி கழக மாணவர் அணியை சேர்ந்தவர்.

இவர் உடுமலையில் இருந்து சைக்கிளிலேயே சென்னை வந்தார். வரும் வழியில் ஆங்காங்கே கழக பிரச்சார நிகழ்ச்சிகளில் கலந்து கொண்டார்.

சென்னையில் இவர் மாணவர் அணிச் செயலாளர் லியாகத் அலிகானைச் சந்தித்தார். லியாகத்அலி கான் அவருக்கு மாலை அணிவித்து வாழ்த்து தெரிவித்தார்.

### காங்கிரஸ் ஊழியர்கள் கூட்டம்

செய்யாறு, டிச 4— செய்யாறு கழக வேட்பாளர் குப்புசாமி வெற்றிக்கு பாடுபடுவது மற்றும் பிரச்சினைகள் குறித்து விவாதிக்க இந்திராகாங்கிரஸ் ஊழியர்கள் கூட்டம் செய்யாற்றில் நடைபெற்றது.

இந்தக் கூட்டத்தில்பழனியாண்டி காங்கிரஸ்நாடாளுமன்ற உறுப்பினர்கள் ஜீவரத்தினம், பலராமன் சட்டமன்ற உறுப்பினர்கள் ராஜா பாபு, கோவிந்தசாமி, கதிர்வேலு, மணவாளன், மாவட்டச் செயலாளர் சவுந்தரராசன் உள்ளிட்ட பலர் பங்கேற்று பேசினர்.

# தமிழக மாணவி அமெரிக்காவில் குத்திக் கொலை

பிலடெல்பியா, டிச. 4— அமெரிக்காவில் சென்னையைச் சேர்ந்த ஒரு மாணவி கத்தியால்குத்திக் கொலை செய்யப்பட்டார்.

அந்த மாணவி பெயர் மீரா. சென்னையைச் சேர்ந்தவர்அவரது தகப்பனார் பெயர் அனந்த கிருஷ்ணன்.

மீரா அமெரிக்காவில்பென்சில்வேனியா பல்கலைக் கழகத்தில் படித்து வந்தார் மீராவுக்கு வயது 24. பவுதீகத்துறையில் டாக்டர் பட்டம் பெற முதலாண்டு படித்து வந்தார்

இவர் தங்கி இருந்த அறையில் கரன் லோச்பாம் என்ற 22வயது மாணவியும் இருந்து வந்தார்

மாணவிகள் படுத்து உறங்கும் அறையில் மீரா பிணமாகக் கிடந்தார்

அவரது நெஞ்சில் கத்திக் குத்து இருந்தது.

உடனடியாக மீராவின் சடலம் பிரேத பரிசோதனைக்கு அனுப்பப்பட்டது. மீராவின் அறையைச் சேர்ந்த லோச்பாம் கூறுகையில் "கடந்தவியாழனன்று எங்களுக்கு விடுமுறை. அதற்கு முந்திய நாளான புதன்கிழமைதான் மீராவை நான் கடைசியாகப் பார்த்தேன்" என்று சொன்னார்.

சம்பவம் நடந்தது எப்படி? மீரா ஏன் கொல்லப்பட்டார் என்பது குறித்து பிலடெல்பியா போலீசார் புலன் விசாரணை நடத்தி வருகிறார்கள்.

# பாதிக்கப்பட்ட தொலைபேசிகளுக்கு கட்டண குறைப்பு

## மாநிலங்களவையில் வலம்புரிஜான் எம். பி. கோரிக்கை

புதுடெல்லி, டிச. 4— கடந்த மாதம் ஏற்பட்ட வெள்ளத்தால் சென்னையில் பாதிக்கப்பட்ட தொலை பேசிகளுக்கு கட்டண குறைப்பு செய்யப்பட வேண்டும் என்று கழக எம்.பி. வலம்புரி ஜான் கோரினார்.

கடந்த மாதம் பெய்த பேய் மழையால் சென்னை நகரில் பெருத்த வெள்ளம் ஏற்பட்டது தெரிந்ததே.

அந்த நேரத்தில் பெரும்பாலான தொலைபேசிகள் இரண்டு வார காலத்திற்கு துண்டிக்கப்பட்ட நிலையில் இருந்தன

இதுபற்றி மாநிலங்களவையில் கழக எம்.பி. வலம்புரிஜான் பேசினார்.

தொலைபேசி இணைப்புகள் துண்டிக்கப்பட்ட காலத்திற்கு கட்டண குறைப்பு செய்யப்படவேண்டும் என்று கோரினார்.

2 வார காலம் தொலைபேசி இணைப்புகள் துண்டிக்கப்பட்ட நிலையில் இருந்தது வருந்தத்தக்கது.

இப்படிப்பட்ட காலங்களுக்கு வழக்கமான தொலைபேசி கட்டணத்தில் இருந்து கட்டணதள்ளுபடி செய்ய வேண்டும் என்று வலம்புரி ஜான் வேண்டுகோள் விடுத்தார்.

### கழகத்துக்கு ஆதரவு

செய்யாறு, டிச 4— செய்யாறு தேர்தலில் கழக வேட்பாளர் குப்புசாமியை ஆதரிப்பதென தமிழக கிராமங்கள் முன்னேற்றக்கழகம் முடிவு செய்துள்ளதாக அக்கழகத் தலைவர் சேதுராமன், செயலாளர், சிவராமன் ஆகியோர் தெரிவித்துள்ளனர்.

### தலைமைக்கழக அறிக்கை எண்: 111-85

# சென்னை தென்னாற்காடு மாவட்டக் கழக தொழிற்சங்கத் தோழர்களுக்கு

கழக விதிமுறைகளுக்கு மாறாக நடந்து கழகத்தின் நற்பெயருக்கு களங்கம் விளைவிக்கும் வகையில் செயல்பட்ட காரணத்தால் தந்தை பெரியார் போக்குவரத்துக் கழகத்தைச் சேர்ந்த

வி பாலகிருஷ்ணன் (விழுப்புரம்)

மா ஜெகதீசன் (திண்டிவனம்)

ஏ பாபநாசம் (விருத்தாசலம்)

கு குப்பன் (வியாசர்பாடி சென்னை)

ஆகியோர் இன்று முதல் கழகத்தின் உறுப்பினர் பொறுப்பு மற்றும் தொழிற்சங்கப் பொறுப்புகளில் இருந்து நீக்கப்படுகிறார்கள்,

கழகசார்பு மன்ற மற்றும் தொழிற் சங்கத் தோழர்கள், யாரும் இவர்களுடன் எவ்வித தொடர்பும் வைத்துக் கொள்ள வேண்டாம் எனக் கேட்டுக் கொள்ளப்படுகிறார்கள்.

இதய தெய்வம் மாண்புமிகு முதல்வர் டாக்டர் புரட்சித்தலைவர் அவர்களின் ஒப்புதலுடன் இவ்வறிவிப்பு வெளியிடப்படுகிறது.

எஸ். இராகவானந்தம்

பொதுச் செயலாளர்
அனைத்திந்திய அண்ணா தி.மு. கழகம்

சென்னை-14
4-12-85

# செய்யாறு: என் வி.என் செல்வம் பிரச்சாரம்

சென்னை, டிச 4— செய்யாறு தொகுதி கழக வேட்பாளர் குப்புசாமியை ஆதரித்து குடிசை மாற்று வாரியத் தலைவர் என்.வி.என் செல்வம் வரும் 5,6,தேதிகளில் தீவிர பிரச்சாரத்தில் ஈடுபடுகிறார்

செல்வத்துடன் வாரிய உறுப்பினர்கள் எம். வி. ராமன், கோதண்டராமன், ஆரோக்கியதாஸ், து நகர் மூர்த்தி மற்றும் பலரும், பெரம்பூர் இளைஞர் அணியினரும் பிரச்சாரத்தில் ஈடுபடுகின்றனர்,

# ஆண்டிப்பட்டி தொகுதியில் 12 புதிய தொழிற்சாலைகள்

மதுரை, டிச. 4— மதுரை மாவட்டம் ஆண்டிபட்டி தொகுதியில் 12 புதிய தொழிற்சாலைகள் தொடங்க திட்டமிடப்பட்டுள்ளதாக மதுரை மாவட்ட ஆட்சித்தலைவர் வரதராஜுலு கூறினார்.

மதுரையில் ஒருங்கிணைந்த ஊரக வளர்ச்சி திட்டம் குறித்த மூன்று நாள் கருத்தரங்கம் தொடங்கியது இந்த கருத்தரங்கில் அனைத்து வங்கி மேலாளர்களும் கலந்து கொண்டனர் கருத்தரங்கை தொடங்கி வைத்து மதுரை மாவட்ட ஆட்சித்தலைவர் வரதராஜுலு பேசியதாவது:—

கடந்த 5 ஆண்டுகளாக ஒருங்கிணைந்த ஊரக வளர்ச்சி திட்டம் அமல் படுத்தப்படுகிறது. இதனால் தக்க பயன்களும் கிடைத்துள்ளது. இந்த திட்டம் விஞ்ஞானப் பூர்வமாக அணுகுமுறையோடு செயல் படுத்தப்படுகிறது.

அனைத்து திட்டங்களாக குறிப்பிட்ட இலக்கை மதுரை மாவட்டம் தாண்டியுள்ளது.

ஆண்டிபட்டி தொகுதியில் 12 தொழிற்சாலைகள் தொடங்க திட்டமிடப்பட்டுள்ளது. அந்த பகுதி மக்கள் பயன் பெறும் விதத்தில் உரியவற்றை அறிந்து தொழிற்சாலைகள் தொடங்குவதால் சற்று தாமதமாகிறது.

இதுவரையில் மூன்று தொழிற்சாலைகள் தொடங்கப்பட்டுள்ளது. இந்த கருத்தரங்கில் அதிகாரிகள் மட்டுமல்லாமல் கலந்து விவாதிக்காமல், தொழில் அதிபர்களையும் அழைத்து அவர்களின் ஆலோசனைகளைப் பெற வேண்டும்.

இவ்வாறு மாவட்ட ஆட்சித்தலைவர் திரு வரதராஜுலு கூறினார்.

### ஏல விற்பனை

1. S. Nirmal Kumar Lalwani, 35. Vannier St. Choolaimedu Madras-94 (1-2-84 முதல் 30-9-84 வரை) ஏலத்தேதி 16-12-85 அன்று பகல் 10 மணிக்கும்

2. K. Nirmal Chand Jain, 13 Magazine Rd; Vysarpadi, Madras—39 (1-1-83 முதல் 31-10-84 வரை) ஏலத்தேதி 16-12-85 அன்று பகல் 11 மணிக்கும்.

3. H. Bhuralal, 22; Thiruvika st. Oteri Ms-12 (1-8-83 முதல் 31-7-84 வரை) ஏலத்தேதி 16-12-85 அன்று மதியம் 12 மணிக்கும்

4. C. Parasmal Jain, 174, Mettu st, Aynavaram Madras-23 (1-4-80 முதல் 31-8-82 வரை) ஏலத்தேதி 17-12-85 அன்று பகல் 10 மணிக்கும்.

5. C. Bhawarlal Jain, 01 M. H. Road (North) Perambur, Madras - 11 1-9-81 முதல் 31-8-84 வரை) ஏலத்தேதி 17-12-85 அன்று மதியம் 2 மணிக்கும்.

6. Champalal Mangilal & Co 643 P. H. Road Aminjikarai, Madras-29 (1—6—80 முதல் 30-9-84 வரை) ஏலத்தேதி 25,11-85 அன்று பகல் 11 மணிக்கு இருந்த ஏலம் 25-12-85 அன்றுபகல் 10 மணிக்கு மாற்றப்பட்டுள்ளது.

7. N. Uttam Chand jain, 150Sachithanandam St, Kosapet Madras—12 (1-10-81 முதல் 31-10-84 வரை) ஏலத்தேதி 15-11-85 அன்று பகல் 10 மணிக்கு இருந்த ஏலம் 25-12 85 அன்று பகல் 11 மணிக்கு மாற்றப்பட்டுள்ளது.

8. S.B. Jain, 150; Sachithanandam St, Ms-12 (1-12-74 முதல் 30-9-84 வரை) ஏலத்தேதி 20-11-85 அன்று பகல் 10 மணிக்கு இருந்த ஏலம் 25-12-85 அன்று மதியம் 12 மணிக்கு மாற்றப்பட்டுள்ளது.

9. K. Parasmal Jain55; K.M. Salai. R.A. Puram, Madras—28 (1,1,80 முதல் 30,5, 4 வரை) ஏலத்தேதி 25 12,85 அன்று மதியம் 1 மணிக்கும், 10. Misrimal Sampatmal Sowcar, 34 P.T.H. Road Madras—12 (1,6,80 முதல் 31,8,83 வரை) ஏலத்தேதி22,11,85 அன்று பகல் 11 மணிக்கு இருந்த ஏலம் 25,12,85 அன்று மதியம் 2 மணிக்கு மாற்றப்பட்டுள்ளது.

11. Mangilal&Co. 249 Purasawakkam High Road Madras-7 (1-10 79 முதல் 30-6-84 வரை) ஏலத்தேதி 7-11-85 அன்று மதியம் 3 மணிக்கு இருந்த ஏலம் 27-12-85 அன்று பகல் 10 மணிக்கு மாறப்பட்டுள்ளது.

12. R. Partapmal Sowcar, 165 StrahansRd, Madras-12(1-11-85 முதல் 30-7-84 வரை) ஏலத்தேதி 8-11-85 அன்று மதியம் 1 மணிக்கு இருந்த ஏலம் 27-12-85 அன்று பகல் 11 மணிக்கு மாற்றப்பட்டுள்ளது.

13 Kamalabai & Co 1053 East Railway Gate, Kolathurmain Road, Madras 99 (1-4-84 முதல் 30-10-84 வரை) ஏலத்தேதி 7-11-85 அன்று பகல் 11 மணிக்கு இருந்த ஏலம் 27-12-85 அன்று மதியம் 12 மணிக்கு மாற்றப்பட்டுள்ளது.

மேற்படியார் கடைகளில் அடகு வைத்துள்ள பொன்-பொன் அல்லாத பொருட்களை வருவாய்த்துறை அதிகாரிகள் முன்பு அரசு அங்கீகாரம் பெற்ற ஏலதாரர் 19 தரம்சந்த்ஜெயின் 150 சச்சிதானந்தம் தெரு சென்னை12ல் மாவட்ட ஆட்சியாளரின் உத்தரவுப்படி மேற்குறிப்பிட்ட ஏலத் தேதிகளில் ஏலம் போடுவார்.

## விஷவாயு: எம்.எல்.ஏக்களுக்கு அமைச்சர் நல்லுசாமி ஆறுதல்

சென்னை, டிச. 4— செய்யாறு இடைத் தேர்தலில் போட்டியிடும் அனைத்திந்திய அண்ணா திராவிட முன்னேற்றக் கழகத்தின் வேட்பாளர் திரு. குப்புசாமியை அறிமுகப் படுத்தும் விழாவில் ஏற்பட்ட விஷ புகை வீச்சினால் பாதிக்கப்பட்டு சென்னை எழும்பூர் கண் மருத்துவ மனையில் அனுமதிக்கப்பட்டு சிகிச்சை பெற்று வரும் காஞ்சி பாலாஜி எம்.எல்.ஏ., காஞ்சி பன்னீர் செல்வம், திண்டிவனம்பட்டு வேலுளம் எல்.ஏ. பாண்டுரங்கன், எம்.எல்.ஏ. ஆகியோரை அமைச்சர் நல்லுசாமி நேரில் பார்த்து ஆறுதல் கூறினார்.

# பத்திரிகைகளின் தரத்துக்கு ஏற்ப விளம்பரம் தருக



## உயர் நீதிமன்றம் ஆணை

ஸ்ரீநகர், டிச. 4- பத்திரிகைகளின் தரத்துக்கு ஏற்றபடி அரசு விளம்பரம் வினியோகிக்க வேண்டும் என்று ஜம்மு- காஷ்மீர் உயர் நீதி மன்றம் தீர்ப்பு அளித்துள்ளது.

ஸ்ரீநகரில் இருந்து வெளிவரும் உருது மொழிப் பத்திரிகை ஸ்ரீநகர் டைம்ஸ் அரசுக்கு எதிராக செய்திகளை வெளியிட்டதால் இரு மாதங்களுக்கு முன் அந்தப் பத்திரிகைக்கு காஷ்மீர் அரசு விளம்பரம் கொடுப்பதை நிறுத்திவிட்டது. இதனால் அந்த நாளிதழ் சார்பில் ஜம்மு - காஷ்மீர் உயர்நீதிமன்றத்தில் வழக்கு [illegible] எங்கள் பத்திரிகைக்கு விளம்பரம் கொடுக்க அரசுக்கு உத்தரவிட வேண்டும் என்று வழக்கில் பத்திரிகை சார்பில் கோரப்பட்டிருந்தது.

நீதிபதிகள் எம்.எல்.பட், ஜி.ஏ.குச்சாய் ஆகியோர் வழக்கை விசாரித்தனர்.

"பத்திரிகைகளின் தரத்துக்கு (Standard) ஏற்ப [illegible] (eligible) செய்தித் தாள்களுக்கு சமமாக விளம்பரத்தை பிரித்து வினியோகிக்க வேண்டும் என்று காஷ்மீர் அரசுக்கு உயர் நீதிமன்றம் உத்தரவிட்டுள்ளது.

அரசின் விளம்பர வினியோக முறையை எதிர்த்து தாக்கல் செய்யப்பட்ட 'ரிட்' மனுவை நீதி மன்றம் விசாரணைக்கு அனுமதித்துள்ளது.

நெய்வேலி நிலக்கரிச் சுரங்ககழகத் தலைவர் எம். பி. நாராயணன் வெள்ள நிவாரண நிதிக்காக ஒரு லட்ச ரூபாய்க்கான காசோலையை முதல்வர் புரட்சித்தலைவரிடம் அளித்தார்.



## குப்புசாமிக்கு ரகுபதிபிரச்சாரம்

செய்யாறு, டிச. 4— செய்யாறு சட்டமன்ற தொகுதியில் உள்ள அனக்காவூர் ஊராட்சி ஒன்றியத்தின் ஒரு பகுதியான வெள்ளை, செய்யாற்றைவென்றான், கீழ்த்தூர் ஆகிய ஊராட்சிகளில் அதற்குட்பட்ட பல கிராமங்களுக்கு காட்பாடி தொகுதி சட்டமன்ற உறுப்பினர் கோ. ரகுபதி இவர்களுடன் வஞ்சூர் வில்வம், நாட்றாம்பள்ளி ஒன்றிய செயலாளர் அனுமந்தன், மெட்டுகுளம் கோவிந்தன், மாணவர் தலைவர் லோகநாதன் வெள்ளை கிளைசெயலாளர் கே.எம்.முருகேசன் மற்றும் பலரும் ஓட்டுசேகரிக்கசென்றனர்.

அங்குள்ள கிராம மக்கள் சத்துணவு தந்த சரித்திர நாயகன் புரட்சித் தலைவர் அவர்களின் அன்புத்தம்பி வே.குப்புசாமி அவர்களுக்கு ஓட்டு அளிப்போம் என்றும் எங்கள் ஓட்டு இரட்டை இலைக்கே என்றும்பெரு மகிழ்ச்சியோடு கூறினார்கள்.

## ஊராட்சி ஒன்றியங்கள் நிதிநிலை: ஆராய உயர்நிலைக் குழு

சென்னை, டிச. 4— ஊராட்சிகள், பேரூராட்சிகள் மற்றும் ஊராட்சி ஒன்றியங்களின் நிதி நிலைகளை ஆராய உயர் நிலைக்குழு ஒன்றை அரசு அமைத்துள்ளது.

இது குறித்து அரசு வெளியிட்டுள்ள பத்திரிகைக் குறிப்பில் தெரிவிக்கப்பட்டுள்ளதாவது:-

ஊராட்சிகள் பேரூராட்சிகள் மற்றும் ஊராட்சி ஒன்றியங்களின் நிதிநிலைமைகளை ஆராய்ந்து அவைகளின் வருவாய்களைப் பெருக்குவதற்கான வழி முறைகளை பரிந்துரைப்பதற்காக உயர்நிலைக்குழு ஒன்றை அரசு அமைத்துள்ளது.

ஊரக வளர்ச்சிஇயக்குநர் இக்குழுவின் தலைவராக இருப்பார், ஒன்பது உறுப்பினர்கள் அடங்கியஇக்குழுவில் அரசின் ஊரக வளர்ச்சித்துறை இணை செயலாளர் பேரூராட்சிகளின் இயக்குநர் நிதித்துறையின் துணைச்செயலாளர் ஆகியோர் உறுப்பினர்களாகப் பணியாற்றுவர்.

ஊராட்சிகள் பேரூராட்சிகள் ஊராட்சி ஒன்றியங்கள் ஆகியவைகளின் நிதிநிலை பற்றிய பல்வேறு அம்சங்களை ஆராய்ந்து அவைகளின் வருவாயைப் பெருக்குவதற்கான பரிந்துரைகளை இக்குழு மூன்று மாதத்திற்குள் அளிக்கும்.

இவ்வாறு பத்திரிகைக் குறிப்பில் தெரிவிக்கப்பட்டுள்ளது

## 10 கோடி ரூபாய் கொள்ளை: பணத்தை லாரியில் ஏற்றிசென்றனர்

கொலம்பஸ், டிச 4— நூதனமான முறையில் 10 கோடி ரூபாயை ஒரு கும்பல் கொள்ளை அடித்துச் சென்றது.

பிரான்ஸில் முக்கிய வங்கிகளுக்கும், இதர நிறுவனங்களுக்கும் பணத்தை எடுத்துச் செல்லும் பொறுப்பை கொலம்பஸ் நகரில் உள்ள ஒரு கம்பெனி மேற்கொள்கிறது. இந்த கம்பெனியிடம் பல்வேறு நிறுவனங்களுக்கு அனுப்ப வேண்டிய 10 கோடி ரூபாய் சேர்ந்திருந்தது. இந்தப் பணத்தை கொள்ளையடிக்க ஒரு கும்பல் திட்டமிட்டது. அந்த கம்பெனியில் வேலை பார்க்கும் சில ஊழியர்களை அவர்களது வீட்டிலிருந்து துப்பாக்கி முனையில் கொள்ளை கும்பலின் ஒரு கோஷ்டி பிடித்துக் கொண்டு பணம் இருந்த அலுவலகத்துக்கு கொண்டு போனது. கொள்ளை கும்பலின் ஒரு பகுதியினர் அந்த ஊழியர்களின் வீடுகளில் துப்பாக்கியோடு காவல் இருந்தனர்.

பிறகு பணம் இருந்த அலுவலகத்தில் கொள்ளையர்கள் [illegible] பிடித்து வந்த ஊழியர்களை வைத்து கொள்ளை அடித்தனர்.

ஒயர்லஸ் கருவி மூலம் கொள்ளை கோஷ்டிகள் ஒருவருக்கொருவர் தொடர்பு கொண்டு மிக சாமர்த்தியமாக அந்தக் கொள்ளையை நடத்தியுள்ளனர்.

கொள்ளை அடித்த பணத்தை ஒரு லாரியில் அவர்கள் ஏற்றிச்சென்றுள்ளனர்.

கொள்ளைக்காரர்கள் தங்கள் மீது குண்டு பாயாதிருக்க, குண்டு துளைக்காத இரும்பு கவசஉடை அணிந்திருந்தனர்.





Edited and Published by K. RAVINDRAN on behalf of Thangamani Publications and Printed by All India Anna D M K. Perarignar Anna Trust Press at 34, Nelson Manickam Road, MADRAS 600029.

## ஏல விற்பனை

1. J. Bhikamchand, 864, G.N.T. Road Redhills, Madras-52 (1-1-82 முதல் 31-8-82 வரை) ஏலத்தேதி 23-12-85 அன்று மதியம் 1 மணிக்கும்.

2. P.M. Desarla, 206 B M.T.H. Road Ambattur, Madras—53 (1.9.82 முதல் 30.6.83 வரை) ஏலத் தேதி 7.11.85 அன்று மதியம் 1 மணிக்கு இருந்த ஏலம் 23-12-85 அன்று மதியம் 1 மணிக்கு மாற்றப்பட்டுள்ளது. 3. Mangilal Jain, 2 M.T.H. Road, Ambattur, Madras—53 (1.5.81 முதல் 31.12.83 வரை) ஏலத்தேதி 6.11.85 அன்று மதியம் 2 மணிக்கு இருந்த ஏலம் 23-12-85 அன்று மதியம் 2 மணிக்கு மாற்றப்பட்டுள்ளது.

மேற்படியார் கடைகளில் அடகு வைத்துள்ள பொன் பொன் அல்லாத பொருட்களை வருவாய்த்துறை அதிகாரிகள் முன்பு அரசு அங்கீகாரம் பெற்ற ஏலதாரர் M. தரம்சந்த் ஜெயின் மேற்குறிப்பிட்ட கடைகளில் மேற்குறிப்பிட்ட தேதிகளில் வருவாய்த்துறை அதிகாரி முன்னிலையில் ஏலம் போடுவார்.

## பொது அறிவிப்பு

### கனரக வாகனத் தொழிற்சாலை

ஆவடி சென்னை-54

ஆவடி கனரக வாகனத் தொழிற்சாலையில் மெஷினிஸ்டாக (SKILLED) பணி புரியும் திரு. கே. பழனிவேலு T. எண் 73347/5192 என்பவர் 31—1—85 தேதி முதல் பணிக்கு வராமல் இருப்பதையொட்டியும், அவ்வாறு அங்கீகாரம் இன்றி பணிக்கு வராமல் இருப்பதன் காரணமாகவும் அவருக்கு 7-9-85 தேதியிட்ட HVF மெமோ எண் ESTT/VIG 85 113 குற்றப் பத்திரிகை ஒன்று அவரது சர்வீஸ் கார்டுகளில் உள்ள விலாசத்திற்கு பதிவுத் தபால் மூலம் அனுப்பப்பட்டது. மேற்கண்ட தபால், தபால் அலுவலக அதிகாரிகளால் கீழ்காணும் அவரது விலாசத்தில் அவர் கிடைக்கவில்லை என்ற காரணத்துடன் திருப்பி அனுப்பப்பட்டுள்ளது.

விலாசம்: 38 A 4-வது தெரு, ராஜாஜிநகர் வில்லிவாக்கம் சென்னை-49

எனவே மேற்படி குற்றப் பத்திரிகையின் நகல் ஒன்றினை 8-9-85-ந் தேதியன்று கீழ்காணும் விலாசத்திற்கு மீண்டும் அனுப்பப்பட்டு திரு. பழனிவேல் அவர்கள் சார்பில் திரு. எஸ். பொன்னையா என்பவரால் பெற்றுக் கொள்ளப்பட்டுள்ளது. எனினும் இந்த குற்றச்சாட்டுக்கு திரு. பழனிவேல் அவர்களிடமிருந்து இதுவரை எவ்வித பதிலும் வரவில்லை

விலாசம்: —
C/o எஸ். பொன்னையா
41, செட்டியக்குடி தெரு
ஸ்ரீவில்லிபுத்தூர் - 626125

எனவே, தற்போது திரு. பழனிவேல் அவர்கள் இந்த அறிவிப்பு வெளியான தேதி முதல் ஒரு மாத காலத்திற்குள்ளாக அவரை ஏன் பதவி நீக்கம் செய்யக் கூடாது என்பதற்கான காரணங்களை தெரிவிக்க வேண்டும் என்று ஜெனரல் மானேஜர் அவர்களால் இதன் மூலம் அறிவிக்கப்படுகின்றது. குறிப்பிட்ட காலகெடுவிற்குள்ளாக எவ்வித பதிலும் கிடைக்கப்பெறாவிடில் 1965ம் ஆண்டு CCS (CC&A) விதிகள் RULE 19 (ii)ன் படி அவர்மீது மேற் கொண்டு நடவடிக்கை எடுக்கப்படும்.

வி. வி. எஸ். ராவ்
துணை பொது மேலாளர்
(நிர்வாகம்)

dav. 685/545/85

# மேடை அமைக்கும் போதே தி.மு.க.வினர் தகராறு செய்தனர்

## செய்யாறு விஷ வாயு சம்பவம்: கழக எம். எல். ஏக்கள் பேட்டி

சென்னை, டிச. 4— செய்யாறு கழக வேட்பாளர் அறிமுகக் கூட்ட மேடை அமைக்கும் போதே தி.மு.க.வினர் தகராறு செய்தனர். விஷ வாயு வீச்சு தி.மு.க.வினரின் திட்டமிட்ட சதியே என விஷ வாயுவால் பாதிக்கப்பட்ட கழக எம். எல். ஏக்கள் கூறியுள்ளனர்.

செய்யாறு கழக வேட்பாளர் குப்புசாமி அறிமுகக் கூட்டத்தில் விஷவாயு பரவியதால் அமைச்சர் முத்துசாமியும், கழக சட்டமன்ற உறுப்பினர்கள் காஞ்சிபுரம் பாலாஜி, தண்டராம் பட்டு வேலு, கலசப்பாக்கம் பாண்டுரங்கன், நாடாளுமன்ற உறுப்பினர் ஏ.சி.சண்முகம் மற்றும் கழகமுன்னணியினர் பாதிக்கப் பட்டது தெரிந்ததே.

காஞ்சிபுரம் மருத்துவமனையில் சிகிச்சை பெற்று வந்தவர்கள் சிகிச்சைக்காக சென்னை எழும்பூர் மருத்துவமனைக்கு வந்தனர். சிவந்த, நீர்வழியும் கண்களுடன் இருந்த சட்டமன்ற உறுப்பினர்களும் மற்றவர்களும் அளித்த பேட்டி வருமாறு: —

### காஞ்சி பாலாஜி

காஞ்புரம் சட்டமன்ற உறுப்பினர் பாலாஜி செய்யாறு சம்பவம் பற்றிக் கூறியதாவது:

கழக வேட்பாளர் அறிமுகக் கூட்டம் 29-ந் தேதி நடைபெற்றது வேட்பு மனுத்தாக்கல் துவங்கியது முதலே நம்மவர்கள் தீவிரப் பிரச்சாரத்தில் ஈடுபட்டனர் கழகத்தவரின் சுறுசுறுப்பு கண்டு அஞ்சிய மாற்றுக் கட்சியினர் தான் இந்த சதி வேலையில் ஈடுபட்டுள்ளனர்.

### பயங்கர நாசவேலை

இந்த சம்பவம் விளக்கு உடைந்ததால் நடந்தது என்பது மிகவும் தவறு மேடைக்கு அருகில் இருந்த ஒரு மெர்க்குரி விளக்கை கூட அணைக்கச் சொன்னோம் அந்த விளக்கை அணைத்த பின்பும் கூட்டம் நடந்தது. அப்போதும் கண் எரிச்சல் அதிகமாகிக் கொண்டே இருந்ததே தவிர குறையவில்லை.

நான் கண் எரிச்சல் இருப்பதைக் கண்டு சரிவர உறக்கம் இல்லாததால் இருக்குமோ என்று நினைத்து தூங்கிவிட்டேன். தூங்கி எழுந்த பின் தான் என் கண் பயங்கரமாக வீங்கி இருந்தது தெரிந்தது அதற்குபின் மாவட்ட துணை மருத்துவ அதிகாரி வந்து மருந்து போட்டார்.

இருந்தும் இன்னும் எரிச்சல் குறையவில்லை. கண்ணெரிச்சலுடன் இப்போது உச்சந்தலையிலும் பயங்கர வலி உள்ளது. கை, கால்களும் அசதியாக உள்ளன.

இந்த சம்பவம் திட்டமிட்ட சதிதான். தி.மு.க. வேட்பாளர் அன்பழகன் முன்பு டெல்லியில் துப்பாக்கி ரசாயன தொழிற் சாலையில் பணியாற்றியவராம்.

இவ்வாறு காஞ்சி பாலாஜி கூறினார்.

### ஏ.வ. வேலு

தண்டராம்பட்டு சட்டமன்ற உறுப்பினர் ஏ.வ. வேலு இந்த சம்பவம் பற்றிக் கூறியதாவது:-

இந்த சம்பவம் மாற்றுக் கட்சிக்காரர்களின் சதி வேலைதான் இந்த சதிக்கு பின்னணி உள்ளது கழகத்தவர் 1ந் தேதி முதலே தீவிரப் பிரச்சாரத்தில் ஈடுபடத் துவங்கினர் இதைக் கண்டு தி.மு.க.வினருக்கு அச்சம் ஏற்பட்டிருக்கலாம். மேலும் 29ந் தேதி காலை செய்யாறில் நமது மேடை அமைக்கப்பட்டு வந்தது. இதற்கிடையில் தி.மு.க.வினர் வேண்டுமென்றே நம் மேடைச் சுற்றிகட்சிதோரணங்களை கட்டத்துவங்கினர்.

இதற்குக்கூட நாம் ஆட்சேபம் தெரிவிக்கவில்லை நமது கட்சி பேனர்களை கட்டத் துவங்கினோம் காலை 10 மணி அளவில் திமுகவைச் சார்ந்த பொட்டி என்கிற கோவிந்தசாமி நமது கட்சி கவரொட்டிகளை கிழிப்பதாக தகவல் கிடைத்தது இதுபற்றி போலீசுக்கு தெரிவித்தேன் 6 மணிவரை நாங்கள் மேடைக்கருகிலேயே இருந்தோம் 7 மணிக்கு எம் எல் ஏக்கள் மேடைக்குச்சென்றனர்

நான் பேசும் போது நாவலர் வந்தார் அப்போதே கண் எரிச்சல் துவங்கிவிட்டது.

தூக்கமில்லாததால் கண்ணெரிச்சல் இருக்குமென்று நான் என்வீட்டிற்கு சென்று ஒரு பக்கெட்டில் தண்ணீர் எடுத்து அதில் கண் விழித்து பார்த்தேன் இருந்தும் எரிச்சல் அடங்கவில்லை.

மறுநாள் காலை காஞ்சிபுரம் மருத்துவமனையில் பலர் கண்எரிச்சல் காரணமாக அனுமதிக்கப்பட்ட செய்தி கேட்டு நானும் ஓடோடி வந்து மருத்துவமனையில் சேர்ந்தேன்.

நமது மேடை அமைக்கும் போதும், போஸ்டர் ஒட்டிய போதும் தகராறு செய்யத் துவங்கிய தி.மு.க.வினர் தான் நம்மீது பொறாமை கொண்டு இந்த சதிச்செயலை செய்திருக்க வேண்டும்.

இவ்வாறு ஏ. வ. வேலு கூறினார்.

### பாண்டுரங்கன்

இந்த சம்பவம் பற்றி கலசப்பாக்கம் சட்டமன்ற உறுப்பினர் பாண்டுரங்கன் கூறியதாவது:

9 மணி அளவிலேயே எனக்கு கண் எரிச்சல் ஏற்பட்டது. சம்பவம் நடந்த இடத்தில் எந்த லைட்டும் உடையவில்லை. எந்த கசிவும் ஏற்படவில்லை, நான் இரவோடு இரவாக காஞ்சிபுரம் வந்து மருந்துக் கடையில் மருந்து வாங்கி போட்டேன். இருந்தும் சரியாகாததால் காஞ்சிமருத்துவமனையில் சேர்ந்தேன்.

கழகத்தவர்கள் தீவிரமாக பணியாற்றுவது கண்டு தி.மு.க.வினர் காற்றில் விஷப்பொடியை கலந்திருக்கலாம் என்று கருதுகிறேன். அதுவும் குறிப்பாக தீவிர பணியாற்றக்கூடிய கழகத்தவர்களை முடக்க நடந்த சதிதான் இது.

கண்ணெரிச்சலோடு உச்சந் தலையிலும் பயங்கர வலி இருக்கிறது.

இவ்வாறு பாண்டுரங்கன் கூறினார்.

காஞ்சி நகரச்செயலாளர் சி.பி. ராஜேந்திரன் இந்தச் சம்பவம் பற்றி கூறுகையில் இது திட்டமிட்ட சதிதான் என்று கூறினார்.

# சென்னை-விழுப்புரம் ரயில் போக்குவரத்து: 8ந்தேதி முதல் துவக்கம்

சென்னை, டிச 4— வெள்ளத்தால் சேதமடைந்த சென்னைவிழுப்புரம் ரயில் பாதை சரி செய்யப்பட்டு விட்டது. ரயில் போக்குவரத்து வரும் 8ந்தேதியிலிருந்து துவங்கும் இதையொட்டி நேற்று ரயில் சோதனையோட்டம் விடப்பட்டது.

கடந்த மாதம் தொடர்ந்து 12 நாட்கள் பெய்த மழையின் காரணமாக வெள்ளம் ஏற்பட்டது. இதனால் மதுராந்தகம் ஏரி உடைந்து அருகே உள்ள கிளியாறு ரயில்பாலம் வெள்ளத்தில் அடித்துச் செல்லப்பட்டது.

ஏறத்தாழ 500 அடி தூரத்திற்கு ரயில் தண்டவாளம் வெள்ளத்தில் அடித்துச் செல்லப்பட்டது. இதனால் சென்னை எழும்பூர் — விழுப்புரம், ரயில் போக்குவரத்து நிறுத்தப்பட்டது.

எனவே ரயில் பாலம் புதுப்பிக்கும்பணி இரவு பகலாக நடைபெற்றது. இந்த பணியில் 50 என்ஜினியர்கள், 120 மேற்பார்வையாளர்கள் மற்றும் 7 200 தொழிலாளர்கள் ஈடுபட்டனர்.

இந்த ரயில் பாலம் அமைக்க 21 நாட்கள் ஆகும் என எதிர்பார்க்கப்பட்டது ஆனால் துரிதமான வேலை காரணமான 14 நாட்களிலேயே பாலம் அமைக்கும் இதைத் தொடர்ந்து சென்னை எழும்பூர் ரயில் நிலையத்திலிருந்து வரும் 8ந் தேதி முதல் பிரயாணிகள் ரயில் விடப்படுகிறது. முன்னதாக 5ந்தேதி முதல் சரக்கு ரயில் ஓடும்.

வைகையும், பல்லவனும் அதிவேக ரயில்கள் என்பதால் விடப்படவில்லை. அவை எப்போது முதல் ஓடும் என்பது பற்றி பின்னர் அறிவிக்கப்படும்.

# இலங்கை பிரச்சினை தீர புதுத் திட்டம்: அமிர்தலிங்கம் தகவல்

புதுடெல்லி, டிச. 4— இலங்கைப் பிரச்சினைத் தீர புதுத்திட்டம் ஒன்றை இந்திய அரசிடம் அளித்திருப்பதாக இலங்கைத் தமிழர் தலைவர் அமிர்தலிங்கம் கூறியுள்ளார்.

தமிழ் ஐக்கிய விடுதலை முன்னணியின் பொதுச் செயலாளர் அமிர்தலிங்கம் நிருபர்களிடம் பேசுகையில் கூறியதாவது:—

இலங்கைப் பிரச்சினைக்கு தீர்வு காண, திம்புப்பேச்சுகளின் அடிப்படையில் புதிய திட்டம் ஒன்றை தமிழர் ஐக்கிய விடுதலை முன்னணி தயாரித்து அளித்துள்ளது.

திம்புவில் நடந்த பேச்சுவார்த்தை அடிப்படையில் இந்த புதிய திட்டம் தயாரிக்கப்பட்டுள்ளது. திட்ட விவரங்களை தற்போது வெளியிடுவதற்கில்லை.

இத்திட்டம் குறித்து பிரதமர் ராஜீவ், இலங்கை ஜனாதிபதி ஜெயவர்த்தனேவுடன் டாக்காவில் பேசக்கூடும்.

இவ்வாறு அமிர்தலிங்கம் கூறினார்.

# கொடிநாள்

## 5 டிசம்பர் 1985

வாய்மையே வெல்லும்

### தாராளமாக நன்கொடை வாரி வழங்குவீர்!

I am glad to know that the Armed Forces Flag Day will be celebrated on the 5th December 1985.

The jawan on patrol duty on the distant border symbolically represents the security of the nation. The Flag Day is a day of remembrance of the selfless service rendered by the Armed Forces in safeguarding our freedom from external threat but also the integrity of the nation in the face of terrorist and separatist forces. It is our duty to extend all support to the jawans and officers when they retire from service. Several programmes for the benefit of ex-servicemen have been launched which require considerable financial resources and I am glad to say that every year the public in appreciation of their services makes generous contributions to the Flag Day fund for their welfare. On a similar occasion this year, I appeal to the people of Tamil Nadu, to contribute liberally to the Flag Day Fund.

**S.L. KHURANA**
Governor of Tamil Nadu.

நமது நாட்டின் தரை, கடல், வான் ஆகிய மூன்று எல்லைகளையும் காத்து நிற்பதில் நமது முப்படை வீரர்கள் ஆற்றும் கண்துஞ்சாக் கடமைகளுக்கு நாட்டு மக்கள் நன்றி தெரிவிக்கும் ஒரு நல்ல வாய்ப்பாக ஆண்டுதோறும் டிசம்பர் திங்களில் கொண்டாடப்படும் கொடிநாள் அமைந்திருக்கிறது. போர்க்காலங்களில் மட்டுமின்றி வெள்ளம், இயற்கை சீற்றங்கள் போன்றவை ஏற்படுகிற நேரங்களிலும் முப்படை வீரர்கள் மக்களுக்கு தொண்டாற்றுகிறார்கள். நாட்டைக் காக்கும் பணியில் தங்களையே காணிக்கையாக்கிவிட்ட வீரர்களின் குடும்பங்களையும் போர் நடவடிக்கைகளால் செயலிழந்து விட்ட வீரர்களையும் அவர்களை நம்பியிருப்பவர்களையும் காப்பாற்ற வேண்டியது நமது சமூகப் பொறுப்பாகும்.

இந்தப் பொறுப்பை நிறைவேற்றிட கொடிநாள் அன்று மக்கள் மனமுவந்து வழங்கும் நன்கொடைகள் பெரிதும் உதவி செய்வதாக இருக்கும்.

நமது படைவீரர்களின் தியாகத்தையும், வீரத்தையும் கடமை உணர்வையும் பாராட்டி நன்றி தெரிவிக்கும் அடையாளமாக கொடிநாள் அன்று படைவீரர் சேம நல நிதிக்கு உற்சாகத்தோடு நன்கொடை வழங்கிட வேண்டும் என்று மக்கள் அனைவரையும் அன்புடன் கேட்டுக்கொள்கிறேன்.

**டாக்டர் எம்.ஜி. இராமச்சந்திரன்**
தமிழ்நாடு முதலமைச்சர்

1985 ஆண்டில் டிசம்பர் திங்கள் 5-ஆம் நாள் கொடி நாள் கொண்டாடப்படவிருக்கிறது. பகைவர்களை அணுகவிடாது போர் முரசு கொட்டி விரட்டியடித்தலிலும், தீவிரவாதிகளின் கட்டுக்கடங்கா செயல்களை ஒடுக்கி அமைதி நிலை நாட்டுவதிலும், இயற்கையின் சீற்றங்களால் இன்னலுறும் மக்களுக்கு உதவுவதிலும் மீட்பதிலும் தன்னலம் கருதாது உயிரையும் பணயம் வைத்துப் பணி புரியும் நாடு காக்கும் தீரர்களை நினைவு கூர்ந்து அஞ்சலி செலுத்தும் திருநாளே கொடி நாளாகும்.

வீரமரணமெய்தியோர் குடும்பங்களுக்கும், விழுப்புண் பெற்று வீடு திரும்பியோர் குடும்பங்களுக்கும், தன்னிகரில்லா சேவை செய்து திரும்பிய வீரர்களுக்கும் அவர்களின் எதிர்காலம் செம்மையுற வழி வகுப்பது நாட்டு மக்களின் தலையாய கடமையாகும். பாரி வழி வந்து வாரி வழங்கும் தமிழ்நாட்டு மக்கள் நாடு காத்தோரின் நலனுக்கென திரட்டப்படும் கொடிநாள் நிதிக்கு உவந்து ஈந்து கடமை காக்க வேண்டுகிறேன்.

**டாக்டர் இரா. நெடுஞ்செழியன்**
தமிழ்நாடு நிதி அமைச்சர்

I am happy to learn that Flag Day is again being observed on 5-12-1985. This atleast one day when we should try and recall the dedicated services rendered by our Armed Forces both in peace and war. On this day I would appeal to all to contribute generously to those, who have served our country so well, in the past.

**T.V. ANTONY, I.A.S.**
Chief Secretary to Govt. of Tamil Nadu.

கொடி நாள்

## முன்னாள் படைவீரர் நல இயக்ககத்தின் ஆக்கப் பணிகள்

**வேலை வாய்ப்பு:**

★ முன்னாள் படைவீரர்களுக்கு வேலை வாய்ப்பில் முன்னுரிமை.

★ போரில் வீரமரணமெய்திய/ஊனமுற்ற படைவீரர்களின் குழந்தைகட்கு வேலை வாய்ப்பில் முன்னுரிமை.

★ முன்னாள் படைவீரர்களுக்கு ஒதுக்கீடு செய்யப்பட்ட மத்திய/மாநில அரசுத்துறை/ நிறுவனங்களில் உள்ள பணியிடங்களுக்கு முன்னாள் படைவீரர்களை பரிந்துரை செய்தல்.

★ படையில் பணிபுரிந்த காலவரையுடன் மூன்று வருடம் வரை மத்திய அரசின் வேலைகளுக்கு வயது வரம்பு சலுகை.

★ ஆதி திராவிடர்கள்/பழங்குடியினர் மற்றும் பிற்பட்ட வகுப்பினருக்கு 53 வயது வரையும் ஏனையோர்க்கு 48 வயது வரையும் தமிழ் நாடு அரசு வேலைகளுக்கு வயது வரம்பு சலுகை.

**சுய வேலை வாய்ப்பு:**

★ தொழிற்பேட்டைகளில் தொழிற்கூடங்கள்/ காலி மனைகளில் முன்னாள் படைவீரர்களுக்கு 10 விழுக்காடு ஒதுக்கீடு.

★ லாரி போக்குவரத்து தேசிய உரிமம் (National Permit) வழங்குவதில் 10 விழுக்காடு முன்னாள் படைவீரர்களுக்கு ஒதுக்கீடு.

★ ஜெய் ஜவான் பெட்டிக் கடைகள் வழங்குதல்.

★ தமிழ்நாடு கூட்டுறவு பால் உற்பத்தியாளர் இணையத்திலிருந்து முன்னுரிமையில் முன்னாள் படைவீரர்களுக்கு தானியங்கி பால் வழங்கும் இயந்திரம் பெறுவதில் உதவி செய்தல்.

**வங்கிக் கடன்:**

★ வங்கிக்கடன் வட்டி மானிய உதவித் திட்டத்தின் கீழ் வங்கிகளிலிருந்தும் மற்றும் தமிழ்நாடு தொழில் முதலீட்டுக் கழகத்திலிருந்தும் (Tamil nadu Industrial Investment Corporation) தொழில் புரியக் கடன் பெறும் முன்னாள் படைவீரர்கள்/அவர் தம் விதவைகளுக்கு ரூ. 5000/- வரையுள்ள கடனுக்கு 4 விழுக்காட்டிற்கு அதிகமான வட்டித் தொகையும் ரூ. 5000/-க்கு மேல் ரூ. 50,000/- வரையுள்ள கடனுக்கு 7 விழுக்காட்டிற்கு அதிகமுள்ள வட்டித் தொகையும் தொகுப்பு நிதியிலிருந்து மானியமாக வழங்குதல்.

**கல்விச் சலுகைகள்:**

★ மருத்துவ, பொறியியல் கல்லூரிகள், தொழிற்நுட்ப கல்லூரிகள், ஆசிரியர் பயிற்சிக் கல்லூரி/பள்ளி, விவசாயக் கல்லூரி, சட்டக் கல்லூரி, டி. பார்மசி கல்வி முதலியவற்றில் முன்னாள் படைவீரர் குழந்தைகட்கு இட ஒதுக்கீடு.

★ தமிழ்நாடு முன்னாள் படைவீரர் நல நிதியிலிருந்து பள்ளி/கல்லூரிகளில் கல்வி பயிலும் முன்னாள் படை வீரர்களின் குழந்தைகட்கு கல்வி உதவித் தொகை.

★ தமிழ்நாடு அரசிலிருந்து ரூ. 5000/-க்குட்பட்ட வருமானம் உள்ள முன்னாள் படைவீரர்களின் குழந்தைகட்கு கல்விச் சலுகை/ உதவித் தொகை வழங்குதல்.

★ தொகுப்பு நிதியிலிருந்து போரில் உயிரிழந்த/ ஊனமுற்ற படைவீரர்களின் குழந்தைகட்கு கல்வி உதவித் தொகை, சீருடைப்படி மற்றும் புத்தகப்படி வழங்குதல்.

★ தொகுப்பு நிதியிலிருந்து மருத்துவ கல்லூரி, பொறியியல் கல்லூரி, வாழ்க்கை கல்வி, வேளாண்மை கல்லூரி, தொழிற் பயிற்சி நிலையம், தட்டெழுத்து பயிற்சிப் பள்ளி முதலிய தொழிற் கல்வி நிலையங்களில் பயிலும் முன்னாள் படைவீரர்கள் மற்றும் அவர்தம் குழந்தைகட்கு கல்வி பயிற்சி உதவித் தொகை வழங்குதல்.

★ முன்னாள் படைவீரர்களின் விதவையர் மற்றும் பெண்களுக்கு தையற் கலையில் பயிற்சி அளித்தல்.

★ முன்னாள் படைவீரர்கள் மற்றும் அவர்களைச் சார்ந்தோர்களுக்கு தட்டெழுத்து மற்றும் சுருக்கெழுத்துப் பயிற்சி அளித்தல்.

**நிதியுதவி:**

தொகுப்பு நிதியிலிருந்து உதவிகள்:

★ 1971-ல் நடந்த இந்திய-பாகிஸ்தான் போரில் வீர மரணம் எய்திய படைவீரர்களின் அடுத்த வாரிசுதாரருக்கு மற்றும் ஊனமுற்ற படைவீரருக்கு வருடாந்திர பராமரிப்பு மானியம்.

★ இந்தியா சுதந்திரமடைந்த பின் நடந்த எல்லாப் போர்களிலும் வீரமரணமெய்திய படைவீரர்களின் விதவைகளுக்கு வருடாந்திர பராமரிப்புப் படி.

★ 1-1-64க்கு முன்பாக படைப்பிரிவிலிருந்து ஓய்வு ஊதியத்துடன் விலகி பின்பு இறந்து போன முன்னாள் படை வீரர்களின் விதவைகளுக்கு மாதாந்திர பராமரிப்பு நிதியுதவி.

★ நாடு சுதந்திரம் அடைந்த பின் ஏற்பட்ட போர்களில் வீரமரணம் எய்திய படைவீரர்களின் விதவைகளுக்கு வீடு கட்டுவதற்கு மானியம்.

★ போரில் வீர மரணம் எய்திய படை வீரர்களின் மகளுக்கு ரூ. 1,500/— திருமண மானியமாக வழங்குதல்.

★ காசநோய்/பொதுமருத்துவ மனைகளில் தங்கி சிகிச்சை பெற்று வரும் முன்னாள் படைவீரர்களுக்கு சத்துணவு மற்றும் அதிக விலையுள்ள மருந்துகள் வாங்க நிதியுதவி.

★ இராணுவ பயிற்சி நிலையங்களில் பயிற்சி பெறுவோர்க்கு வட்டியில்லாக் கடனுதவி.

தமிழ்நாடு முன்னாள் படைவீரர் நல நிதியிலிருந்து உதவிகள்:

★ முன்னாள் படைவீரர்கள் மற்றும் அவர்களைச் சார்ந்தோருக்கு சிறு தொழில் செய்வதற்கு மொத்த நிதியுதவி.

★ முன்னாள் படைவீரர்கள் மற்றும் அவர்தம் விதவைகள் பராமரிப்புக்காக மாதாந்திர நிதியுதவி.

★ ஆதரவற்ற நிலையிலுள்ள வயது முதிர்ந்த முன்னாள் படைவீரர்கள்/அவர்தம் விதவைகளுக்கு ஆயுட்காலம் முழுமைக்கும் மாதாந்திரப் பராமரிப்பு நிதியுதவி.

★ தொழுநோயால் அவதியுறும் முன்னாள் படைவீரர்களுக்கு ஆயுட்காலம் முழுமைக்கு மாதாந்திர நிதியுதவி.

★ முன்னாள் படைவீரர்கள் இறந்து போகும் பட்சத்தில் அவரது ஈமச் சடங்கிற்கு நிதியுதவி.

★ உடனடி நிவாரண நிதியுதவி.

★ இறந்துபோன/ஓய்வு பெற்ற முன்னாள் படைவீரரின் விதவைக்கு குடும்ப ஓய்வு ஊதியம் ஒப்பளிப்பு ஆகும் வரையில் மாதாந்திர இடைக்கால நிவாரண நிதி உதவி (திரும்பச் செலுத்தக் கூடியது).

★ காசநோய்/தொழுநோய்/புற்றுநோய் மருத்துவ மனைகளில் தங்கி சிகிச்சை பெற்று வரும் முன்னாள் படைவீரர்களுக்கு கைப்பணம்.

★ வெள்ளம், தீ, விபத்து போன்ற இயற்கைச் சூழலால் பாதிக்கப்பட்ட முன்னாள் படை வீரர்கள் மற்றும் அவர்களைச் சார்ந்தோர்களுக்கு நிதியுதவி.

★ ஊனமுற்ற முன்னாள் படைவீரர்களுக்கு செயற்கை உறுப்புகள் பெற நிதியுதவி.

★ புனேயில் உள்ள இராணி மேரிப் பயிற்சிப் பள்ளியில் பயிற்சி பெறும் ஊனமுற்ற முன்னாள் படைவீரர்களுக்கு பயிற்சி உதவித் தொகை.

★ முன்னாள் படைவீரர் - தம் ஒரு மகளுக்கு ரூ. 500/-க்கு மிகைபடாமல் திருமண நிதியுதவி.

★ தொழுநோயால் அவதியுறும் முன்னாள் படைவீரர்களின் விதவைகளுக்கு மாதாந்திர நிதியுதவி.

★ கண் பார்வையிழந்த முன்னாள் படைவீரர்களுக்கு மாதாந்திர நிதியுதவி.

★ இந்திய செஞ்சிலுவைச் சங்கத்திலிருந்து, தொழுநோய் மற்றும் காசநோயால் அவதியுறும் முன்னாள் படைவீரர்களுக்கு நிவாரணம் அளிக்கப்படும் வரை இடைக்கால நிதியுதவி.

**இதர நிதியுதவி:**

★ இராணுவ மத்திய நல நிதி, மருத்துவ பிற்காப்பு நிதி போன்ற நிதிகளிலிருந்து முன்னாள் படைவீரர்களுக்கும் அவரைச் சார்ந்தோர்களுக்கும் நிதியுதவி பெற்றுத் தருதல்.

**மருத்துவம்:**

★ அரசு வட்டத் தலைமை மருத்துவமனைகளில் 12 படுக்கைகள் கொண்ட தனி வார்டு.

★ ரூ. 200/-கும் குறைவான மாத ஊதியம் பெறும் முன்னாள் படைவீரர்கள்/ அவர் தம் குடும்பத்தினருக்கு இலவச மருத்துவச் சிகிச்சை.

★ காச நோய் மருத்துவ மனைகளில் முன்னாள் படைவீரர்களுக்கு 10 படுக்கைகள் ஒதுக்கீடு.

**சட்ட ஆலோசனை/உதவி:**

★ படைப்பிரிவைச் சேர்ந்தவர்களுக்கு நீதி மன்றங்கள் மூலம் தீர்வு செய்ய வேண்டிய வழக்குகளில் இலவச சட்ட உதவி பெற உதவுதல்.

**நிலம்/வீட்டுமனை/வீடுகள்/குடியிருப்புத் தட்டுக்கள் (Flats):**

★ தமிழ்நாடு அரசிலிருந்து முன்னாள் படைவீரர்கள் மற்றும் போரில் வீரமரணமெய்திய/ ஊனமுற்ற படைவீரர்கள் குடும்பங்களுக்கு வீட்டு மனைகள்/விவசாய நிலங்கள் ஒப்படை செய்வதில் முன்னுரிமை.

★ தமிழ்நாடு வீட்டு வசதி வாரியத்தினால் தவணை முறையில் விற்கப்படும் வீடுகள்/ குடியிருப்புத் தட்டுக்கள் (Flats)/வீட்டு மனைகள் பெறுவதில் முன்னாள் படைவீரர்களுக்கு 7½% ஒதுக்கீடு. இந்த 7½%ல் "பரம்வீர் சக்கரா", "மகாவீர் சக்கரா" மற்றும் "வீர்சக்கரா"—விருது பெற்றவர்களுக்கு 1% ஒதுக்கீடு செய்யப்பட்டுள்ளது.

**பலவிதம்:**

★ ஓட்டுநர் உரிமம்/துப்பாக்கி உரிமம் பெறுவதற்கும், உரிமைகளைப் புதுப்பிப்பதற்கும் முன்னாள் படைவீரர்களுக்கு கட்டண விலக்கு அளிக்கப்பட்டுள்ளது.

★ 1899-ம் ஆண்டு இந்திய முத்திரை வரிச் சட்டத்தின் கீழ் முன்னாள் படைவீரர்கள் முத்திரை வரியிலிருந்து விலக்களிக்கப் படுகிறார்கள்.

★ இராணுவ உபரி வாகனங்கள் பெறுவதில் முன்னாள் படைவீரர்களுக்கு உதவி செய்தல்.

★ மிலிட்டரி அங்காடிகளில் வேண்டிய பொருட்களை பெறுவதில் உதவி செய்தல்.

★ அவ்வப்போது தேவைக்கேற்ப வேலைகளுக்கான தேர்வுகளுக்கு பயிற்சி அளித்தல்.

★ படையில் சேர இளைஞர்களுக்குப் பயிற்சி அளித்தல்.

**சிறப்பு அம்சங்கள்:**

★ 1984 டிசம்பர் மாதம் நடைபெற்ற பொதுத் தேர்தலில் 15,000 முன்னாள் இராணுவத்தினர் காவல் துறைக்கு உதவி புரிந்தனர்.

★ 1985 மார்ச் மாதம் நடைபெற்ற பொதுத் தேர்தலில் 3000 முன்னாள் இராணுவத்தினர் ஆந்திர பிரதேச காவல் துறைக்கு உதவி புரிந்தனர்.

★ வண்டி நிறுத்த கட்டணம் வசூலிக்கும் திட்டத்தில் 160 முன்னாள் இராணுவத்தினர் சென்னை மாநகராட்சிக்கு உதவுகின்றனர்.

★ நகரப் பகுதிகளில் இரவு காவல் புரிவதில் 600 முன்னாள் இராணுவத்தினர் காவல் துறைக்கு உதவுகின்றனர்.

★ முன்னாள் இராணுவத்தினர் வணிகக் கழகம் பதிவு செய்யப்படுகிறது.

★ 269 ஜெய் ஜவான் கடைகள்.

★ ஒவ்வொரு சனிக்கிழமை மாலை 6.25 மணிக்கு அகில இந்திய வானொலியில் முன்னாள் இராணுவத்தினருக்கான செய்தி.

★ பயன்பெற்ற மொத்த முன்னாள் இராணுவத்தினர் 12534. மானியங்களின் தொகை ரூ. 23.87 இலட்சம்.

★ நாட்டுடைமையாக்கப்பட்ட வங்கிகளிலிருந்து பெற்ற ரூ. 165 இலட்சம் கடன்களின் மீது 1085 முன்னாள் இராணுவத்தினர் வட்டி மானியங்கள் பெற்றுள்ளனர்.

DIPR/85 (R)